# இந்த பளுவுக்குப் பிறகே குடும்பப் பளு!

சூரியப்ரபாவை நேரில் பார்த்தால் தேசிய சாம்பியன் என்றோ, உலக அளவில் பளுதூக்கும் போட்டிகளில் மூன்றாம் இடம் வகிப்பவர் என்றோ சத்தியமாகச் சட்டென்று சொல்லிவிட முடியாது.

ஒரு மிக சாதாரண, கீழ் மத்திய தரக் குடும்பப் பெண்ணின் தோற்றம். பழைய மாடல் மூக்குக் கண்ணாடி. பேச்சில் வெகு சிக்கனம். குரலில் கொஞ்சம் கரகரப்பு.

ஆறு வருஷ தேசிய சாம்பியன். அண்ணா நகரில் சின்னதாக ஒரு வாடகை பிளாட்டில் வாசம். அலமாரி நிறைய கோப்பைகள். மெடல்கள். கூடத்துத் தரையில் வெயிட் லிஃப்டிங் உபகரணங்கள். சமீபத்தில் ஜெயலலிதா இவரைக் கவனித்து, ஒரு லட்ச ரூபாய் வழங்கி, திருமுல்லைவாயிலில் ஒரு வீட்டையும் கொடுத்திருக்கிறார். "இனிதான் குடி போக வேண்டும்" என்றார் இருபத்திரண்டு வயது சூர்யப்ரபா.



கிரிக்கெட் போன்ற விளையாட்டுக்களையும் விளையாடுபவர்களையும் கவனிப்பதைப் போல, நம் அரசாங்கம் பளு தூக்கும் வீரர்களைக் கவனிப்பதில்லை என்பது இவர் குறை. சின்ன வயதில் ஹாக்கியில் ஆர்வம் காட்டி, பின் அப்பா கண்ணப்பனின் ஊக்குவிப்பால் பளு தூக்கும் விளையாட்டுக்கு வந்தவர் சூர்யப்ரபா. "அவரும் ஒரு வெயிட் லிஃப்டர் தான்."

மென்மையான பெண்களுக்கு வெயிட் லிஃப்டிங் எல்லாம் எப்படி சரிப்பட்டு வரும்?

"பழகப்பழக எதுவும் சாத்தியம்" என்கிறார் சூர்யா. பள்ளி நாட்களிலிருந்தே பரிசுமழையில் நனையத் தொடங்கியவர் இவர்.

"தியானம், யோகா மாதிரிதான் பளு தூக்குதலும்' என்பது இவர் கருத்து.

## தேர்தல் வருகிறது...

தெருச் சுவர்கள்
வண்ண எழுத்துக்களின்
மெருகில்
புண்ணாகும்.

முக்கம், சந்தெனை
திரும்பும்
திக்கெல்லாம்
பிரசாரத் தீ

வாக்குறுதிகள்-
பொய்த்தழும்பேறிய
நாக்கின்
வேட்டைக் களமாகும்.

தேர்தல் பரமபதத்தில்
ஜனநாயகத் தாயம்
வெற்றி பெற்றவர்க்கு
ஏணியாகும்.

வாக்கிடுபவர்க்கோ-
வாழ்க்கை மீண்டும்
சறுக்கி விழச் செய்யும்
பாம்பாகும்.

- யுகபாரதி



"மன ஒருங்கிணைப்பு மிக முக்கியம் மனம் ஒன்றுபட்டால் உடல் தன்னால் ஒத்துழைக்கும்" என்கிறார்.

உடற்பயிற்சிகளும் அதிகம் வேண்டும் என்கிறார். தினசரி இரண்டு மணி நேரப் பயிற்சி. தவிர கொஞ்சம் சத்துணவு (ஒரு லிட்டர் பால், இரண்டு முட்டைகள், பேரீச்சம்பழம், பாதாம்).

"இதற்குக் கூட சிரமப்படும் குடும்பம் எங்களுடையது. இருப்பினும் எப்படியும் என் தேவைகளை நிறைவேற்றி விடுகிறார்கள்" என்று நெகிழ்ச்சியுடன் குறிப்பிடுகிறார்.

சாதாரணமாக எத்தனை வயது வரை பளு தூக்குதலெல்லாம் சாத்தியம்?

வயது ஒரு பொருட்டல்ல என்கிறார் இவர். "ஆண்களில் 40 வயது ஆனவர்களும் முப்பத்தைந்தைக் கடந்த பெண்களும் கூட போட்டிக்கு வருவார்கள்."

"திருமணமாகி குழந்தைகள் உள்ள பெண்கள் கூட உலக அளவில் பளுதூக்கும் சாம்பியன்களாக இருக்கிறார்கள்" என்று சொன்னார் சூர்யப்ரபா.

அதுசரி. இது போன்ற வீர விளையாட்டுக்களில் ஈடுபடும் பெண்களுக்குக் குடும்ப வாழ்க்கையெல்லாம் சிக்கலில்லாமல் இருக்குமோ? கணவனுக்குப் பிடிக்காவிட்டால்...?

"என்னைப் பொறுத்தவரை, தற்சமயம் திருமண எண்ணமெல்லாம் இல்லை. அடுத்த உலக சாம்பியனாக வேண்டும் என்பது தான் லட்சியம். பிற்காலத்தில் ஒரு ஸ்போர்ட்மேன் கணவனாக வந்தால் என்னைப் புரிந்து கொண்டு ஒத்துழைக்க முடியும். அப்படி அமையாத பட்சத்தில் எத்தனை நான் முடிகிறதோ, அதுவரை போட்டிகளில் கலந்து கொண்டு, ஓய்வுக்குப் பின் தான் திருமணம்!"

மிக திடமாக இருக்கிறார் சூர்யப்ரபா.

டீ.வி.பார்ப்பது, புத்தகம் படிப்பது, சினிமா எதிலும் ஆர்வம் இல்லை இவருக்கு. ("தியேட்டருக்குப் போய் பல வருஷங்கள் ஆச்சு!")

ஒரே லட்சியம்- பளு தூக்குதலில் உலக அளவில் நம்பர் ஒன்.

அதற்காகப் படிப்பைக் கூட, பள்ளி அளவிலேயே நிறுத்தி இருக்கிறார்.

- எஸ். சந்திரமௌலி

வண்ணப்படங்கள் : யோகா

# சுஜாதா பக்கம்



படம் : யோகா

சென்ற மாதம் ஸ்ரீரங்கம் சென்றிருந்தபோது ஒரு ராட்சச மாநாடு முடிந்து, திருச்சி சுவர்கள் முழுவதும் தமிழ்த்தாய், காவிரித்தாய், தெய்வத்தாய், அன்புத்தாய், கழகத்தாய் என்றெல்லாம் ஒரு தனி நபர் துதிக்கப்பட்டதைக் கண்டேன்." இந்தத் தாய் பிசினஸ் நம்மில் ஊறியது. தேசத்தைத் தாய் என்போம். மொழியை, நிலத்தைத் தாய் என்போம். திருவள்ளுவரே 'நிலமென்னும் நல்லாள் நகும்' என்கிறார்.

ஆனால் இப்போது பூமியைத் தாயாகக் கருதுவதில் மட்டும் அறிவியல் ஆதாரம் இருக்கிறது. கெய்யா (Gaia) என்கிற சித்தாந்தத்தின்படி நம் பூமியே ஓர் உயிருள்ள செல் என்கிறார்கள்.

பியர் ஷார்டின் என்கிற கத்தோலிக்கத் தத்துவ அறிஞர் THE PHENOMENON OF MAN என்கிற நூலில் பூமிக்கு ஒரு மனம் இருக்கிறது என்கிற கருத்தைச் சொன்னார். அவருடைய சகாக்களுக்கு ஷார்டினின் கருத்துகள் ஒத்துவரவில்லை. அவர் புத்தகங்கள் எதையும் அவரது வாழ்நாளில் பதிப்பிக்கவில்லை. இப்போது அவர் சொன்னதற்கு மதிப்பு வந்துள்ளது.

கெய்யா தத்துவம் ஜேம்ஸ் லவ்லாக் என்னும் பிரிட்டிஷ் உயிரியல் விஞ்ஞானியால் கொண்டுவரப்பட்டது. 'கெய்யா' பூமி தேவதைக்கு உண்டான கிரேக்க வார்த்தை. பூமி என்பது அதன் உயிரினங்களால் உயிர் வாழும் - அவைகளை வாழ வைக்கும் ஓர் உயிர் என்பதே இதன் சாரம்.

கோடி வருஷங்களாக பூமியின் அமைப்பில் மாறுதலே இல்லை. அதன் சூழலில், காற்றில் உள்ள சங்கதிகளின் விகிதாசாரம் அப்படியே இருக்கிறது. கடல் உப்பின் சதவிகிதம் நிலைத்து இருக்கிறது. திடீர் என நைட்ரஜன் அதிகமாவதில்லை, கடல்நீர் குடிநீராவதில்லை, உஷ்ண நிலையும் ஓரளவுக்குக் கட்டுப்பாட்டில் உள்ளது. லவ்லாக் இது தற்செயலானது அல்ல, பூமி உயிரினங்களைத் தாங்குவதற்கென ஏற்பட்ட ஒரு மகா உயிர்; தன் சுற்றுச் சூழலைப் பல லட்சக்கணக்கான வருஷங்களாகக் கட்டுப்படுத்தி, நாம் வாழ்வதற்கேற்ப திருத்திக் கொண்டே இருக்கும் உயிர் என்கிறார்.

லவ்லாக்கின் சித்தாந்தத்தை மறுப்பவர்கள் இருக்கிறார்கள். ஆனால் ஆதரவாளர்கள் அதிகமாகிக் கொண்டிருக்கிறார்கள். அமெரிக்க அறிஞர் லூயிஸ் தாமஸ், பூமியே ஒரு செல் உயிராக இருக்கலாம் என்கிறார். இன்று இண்டர்நெட் மூலம் அதன் கணிப்பொறிகள் அனைத்தும் இணைத்துக் கொள்வது, மூளையின் நியூரான்கள் அறிவு பெருகப் பெருக இணைப்புகளை அதிகரிப்பது போல் என்கிறார்.

சுற்றுச் சூழல் பாதிக்கப்பட்டு ஓஸோன் போர்வை கிழிந்தாலும் பூமி நம்மைக் காப்பாற்ற ஏதாவது வழி வகை செய்யும் என்று சிலர் நம்புகிறார்கள்.

பூமியில் உள்ள அத்தனை உயிரினங்களின் மொத்த எடையை 'பயோமாஸ்' (Biomass) என்கிறார்கள். அது இப்போது ஏழாயிரத்து ஐந்நூறு கோடி டன் என்று கணக்குப் பண்ணிச் சொல்கிறார்கள். அதில் இருபத்தைந்து கோடி டன் மனித இனம். நூற்று எண்பது கோடி டன் மிருகங்கள். அதில் பாதிக்கு மேல் மீன் இனங்கள். ஆயிரம் கோடி டன் செடிகொடிகள். மரங்கள் மூவாயிரத்துத் தொள்ளாயிரம் கோடி. கடல் பாசியே இரண்டாயிரத்து நானூறு கோடி!

இதெல்லாம் குத்துமதிப்பான எண்ணிக்கைகள்தாம். நம் உலக மக்கட்தொகை ஐந்நூறு கோடி பேர், இன்றைய வேகத்தில் குப்பை கொட்டி மரம் வெட்டிக் கொண்டிருந்தால் இன்னும் நூறு வருஷம்தான் தாங்குவோம் என்கிறார்கள்.

அதுவரை -

பூமித்தாய் காப்பாற்றுவாள் என்று சிலர் நம்பலாம். இந்த 'காப்பாற்றல்' நம் மனமாற்றத்தின் மூலமாகவும் பூமியை விட்டு வெளியே சென்று புதிய காலனி அமைப்பதன் மூலமும்தான் ஏற்படும் என்கிறார்கள். அணு ஆயுதப் போரிலிருந்து ஒருவாறு தப்பித்துவிட்டோம் என்று சொல்லலாம். கி.பி. 2100 வரை கவலை இல்லை. அதாவது இதைப் படிக்கும் எனக்கும் உங்களுக்கும் கவலையில்லை.

நம் பேரப்பிள்ளைகளுக்கு...

நம்முடைய முட்டாள்தனத்தையும், பேராசையையும், 'நிலமென்னும் நல்லாளை' நாம் பாளம் பாளமாகச் சேதமாக்கியதின் அறிவீனத்தையும் ஒட்டுமொத்தமான ஓர் 'உலக மனம்' ஒப்புக் கொண்டால்தான் விமோசனம்.

*(மீண்டும் அடுத்த வாரம்)*

# உள்ளே — வெளியே :

## "வெறும் பெருங்காய டப்பா ஸார்"

**வெளியே :**

சென்னை மாநகராட்சி- ரிப்பன் கட்டடம். சுற்றுச் சுவரை ஒட்டி நடப்பவர்களுக்கு கட்டடத்தைப் பார்க்காமலேயே புரிந்து விடும், மாநகராட்சி அலுவலகத்தை ஒட்டி நடக்கிறோம் என்பது. மூக்குக்கு மூடி போடும் அளவுக்கு துர்நாற்றம், நடைபாதையின் கீழுள்ள மழைநீர் வடிகால் கால்வாயிலிருந்து அடிக்கிறது.

விதவிதமான மோதிரங்கள். அதன் முகப்பில் வண்ண, வண்ண கற்கள். கொஞ்சம் உற்றுப் பார்த்தோம். "சொல்லுங்க ஸார்... உங்க ராசி என்ன, நட்சத்திரம் என்ன?" அதுக்கேற்ற கலர் கல் வைத்த மோதிரம் தர்றேன்'' என்றார் கேட்டை ஒட்டி கடை போட்டிருந்த அந்த நடுத்தர வயது வாலிபப் பெரியவர். பக்கத்தில் ஓர் அட்டையில் இங்கு உள்நாடு வெளிநாட்டு புதிய, பழைய கரன்ஸிகள் வாங்கப்படும்' என்று வேறு எழுதி வைத்திருந்தார். அது சரி, ரிஸர்வ் வங்கி வேலை செய்ய இவருக்கு யார் அனுமதி கொடுத்தது? விசாரித்தால் "கரன்ஸி நோட்டுக்கள் சேர்..து பலருக்கு ஹாபி. அதுதான், வேறொன்றுமில்லை. நாங்க வாங்கி அவங்களுக்கு வித்துடுவோம்."

பக்கத்தில் கைரேகை; ஜோசியம் பார்த்துக் கொண்டிருந்தார் பெரியவர் ஒருவர். "மணி பதினொண்ணாகப் போவுது... காலைல இருந்து நாஷ்டா கூடப் பண்ணலை. முதல்ல பணத்தைக் கொடு.. சாப்பிட்டாத்தான் தெம்பு வரும்" என்றார் பெரியவர்.

"போன தபா நீ சொன்ன மாதிரி ஒண்ணும் நடக்கலியேப்பா. வீடு ராயபுரத்திலே. ஆனா வேலையை வேளச்சேரிக்கு மாத்திட்டாங்க. போய் வர்றதே பேஜாரா இருக்குதே!"- மாநகராட்சி ஊழியர் போலிருக்கிறது.

"ஆமாய்யா... அவனவன் காஷ்மீர், பஞ்சாப்னு போய் பொழைப்பைப் பார்க்குறான். இவரு என்னவோ வேளச்சேரி போறதுக்கு கஷ்டப்படறாரு... சரி... சரி... காசைக் கொடுப்பா..." என்று காரியத்தில் கண்ணாக இருந்தார் பெரியவர்.

அதற்குள் வாலிபர் ஒருவர் "ஸார் கடை லைஸன்ஸ் புதுப்பிக்க எங்க ஸார் போணும்?" என்று அந்த மாநகராட்சி ஊழியரிடம் கேட்க "இந்த பில்டிங் பின்னாடி போய்ப் பார்... ஜே... ஜேன்னு கூட்டம் அலை மோதும்" என்றார் அவர். அந்த வாலிபர் விறுவிறுவென ரிப்பன் பில்டிங்கில் நுழைய, நாமும் அவரைப் பின் தொடர்ந்து நுழைந்தோம்.

**உள்ளே:**

கிட்டத்தட்ட ஆயிரம் பேருக்கு மேல் வரிசையில் நின்றிருந்தார்கள். போலீஸ் கூட்டத்தை ஒழுங்கு படுத்திக் கொண்டிருந்தது. சென்னை மாநகராட்சிக்குட்பட்ட பகுதிகளில் கடைகள், ஹோட்டல்கள், வைத்திருப்பவர்கள் குறிப்பிட்ட கால அவகாசத்துக்குப் பிறகு மாநகராட்சி லைசென்சைப் புதுப்பித்துக் கொள்ள வேண்டும். அதுதான் கூட்டம்.

"ஏய்...ஏய்... சைடுல ஆளை விடாதே!" என்று க்யூவின் கடைசியில் குரல் கொடுத்துக் கொண்டிருந்தார்கள் சிலர்.

"இது என்னா ஸார்... படா பேஜாரு. ஒழுங்கா லைசென்ஸ் இருந்தா மட்டும் மாமூலை கொடுக்காம இருந்திட முடியுமா? அதை வேற அவ்வப்போது அழுது தொலைக்கணுமே'' என்று நம்மிடம் புலம்பினார் சிறிய டிபன் கடை நடத்தும் ஒருவர்.

இன்னொரு இடத்தில் 'உயிர் சான்றிதழ் பெற்றுக் கொள்ளப்படும்' என்று எழுதி வைத்திருந்தார்கள். அட, உயிர் சான்றிதழ். அது என்ன? உள்ளே சென்றோம். அது ஓய்வூதிய அலுவலகமாம். மாநகராட்சியில் பணி செய்து ஓய்வு பெற்றவர்களுக்கு பென்ஷன் ஆபீஸ். ஓய்வு பெற்ற துப்புரவுப் பணியாளர்கள், ஆசிரிய, ஆசிரியைகள் என்று அந்த சிறிய ஹாலில் ஏகப்பட்ட கூட்டம். தமிழைவிட தெலுங்கு வாடை அதிகம்.

"வயசான காலத்துலே எங்களை ஏன் இப்படி அலைய வைக்கறாங்க... பாரம் வாங்க ஒரு தடவை. அதைக் கொடுக்க ஒரு தடவை. என்று வர வேண்டியிருக்கு... இன்னா தம்பி சொல்லறே..." என்று நம்மைப் பார்த்து கேட்டார் அந்த சீனியர் சிடிசன்.

ஓய்வூதியம் வாங்குபவர்கள் வருஷத்துக்கு ஒருமுறை 'நாங்கள் உயிரோடு தான் இருக்கிறோம்' என்று சான்றிதழ் தர வேண்டுமாம். அதுதான் விவகாரம், வேறொன்றுமில்லை!

அப்படியே நகர்ந்து மாநகராட்சி கருவூல அலுவலகத்துக்கு வந்தோம். அங்குள்ள கேஷ்

கவுண்டருக்கு முன்னால் பத்துப் பதினைந்து பேர் நின்று கொண்டிருந்தார்கள். கவுண்டரில் ஆள் இல்லை. "நமக்கு வேற வேலை இல்லை. என்னப்பா இது அரைமணியா ஆள் இல்லை" என்று சொல்லிக் கொண்டிருந்தார் ஒருவர். எதிரில் படிக்கட்டுகளில் மாநகராட்சி அடையாளக் கார்டு மாட்டிக் கொண்டு (ஊழியர்கள்) நாலைந்து பேர் மலரும் நினைவுகளை அவிழ்த்து விட்டுக் கொண்டிருந்தார்கள்.

**மா**நகராட்சி, நகரைத்தான் அசுத்தமாக வைத்திருக்கிறதே தவிர, அதன் தலைமை அலுவலகத்தை spic and span என்று சொல்வார்களே அப்படி வைத்துக் கொண்டிருக்கிறது. மாடிப் படிக்கட்டுகளில் சிவப்புக் கம்பளம். முதல் மாடியில் ஆணையர் அலுவலகம்.



இரண்டாவது மாடியில் சிறப்பு அதிகாரியின் அலுவலகம் மற்றும் மாநகராட்சி உறுப்பினர்கள் கூடும் மன்றம். வெள்ளி விழா காலத்துக்குத் தேர்தல் நடைபெறாத நிலையை மனத்தில் கொண்டோ என்னவோ, மேயர் ஆசனத்தைக் கறுப்புத் துணி போட்டுப் போர்த்தியிருக்கிறார்கள். காவலுக்கு போலீஸ்காரர் வேறு.

முதல் மாடி வராந்தாவில் காப்பி விற்பவரைச் சுற்றி சுமார் இருபது பெண்கள். கலகலப்புக்குக் கேட்க வேண்டுமா?

"ரொம்பத்தான் லொள்ளு பண்றான் அந்த ஆளு! அங்கேருந்தே முறைக்கறான் பார்." நாமும் அலுவலகத்துக்குள் பார்வையை அலைய விட்ட போது, தென்பட்டவர் ஒரு சோடா பாட்டில் கண்ணாடியுடன் இருந்த நாமக்காரர்.

**கீ**ழ்த்தளத்தில் நிலம் வாங்குவது, விற்பது மற்றும் கட்டடங்கள்ள்ளான் சம்பந்தப்பட்ட அலுவலகங்கள். நடுத்தர வயது பெண்மணி, தம்மைப் பார்க்க வந்திருந்தவர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

"இன்னிக்கு அந்த 'பாய்' இல்லை. இருந்தா காரியத்தை முடிச்சிடலாம். நாளைக்கு வாங்க... அவரு இல்லாட்டி கூட செக்ஷன்ல போய்ப்பாருங்க. வில்லங்க சர்டிபிக்கேட்டுக்குப் பத்துப் பதினைந்து ரூபாய் போதும். ஐம்பது, நூறுன்னு கேட்டா பேசாம வந்து என்கிட்ட சொல்லிடுங்க..." என்று ரொம்ப தேர்த்தியாக ஆலோசனை சொல்லிக் கொண்டிருந்தார் அவர்.

**க**ட்டடத்துக்குள்ளே ஐந்து முறை சுற்றி விட்டு வெளியே வரும் போதுதான் தெரிய வந்தது, அனுமதி சீட்டு வாங்கிக் கொண்டு உள்ளே போக வேண்டு மென்பது!

புறப்படும்போது, "ஆளுங்கட்சிக்காரர்களெல்லாம் இங்கே சிபாரிசுக்கு வருவதில்லையா?" என்று வயதான மாநகராட்சி ஊழியர் ஒருவரிடம் கேட்டோம்.

"ரொம்பத்தான் அலட்டிக்கிறாங்க... சும்மா எலும்புக்கூடு மாதிரி தான் இந்த ஆபீஸ். எப்போ டிரைனேஜும், குடிநீரும் கார்ப்பரேஷன் கண்ட்ரோல்ல இல்லையோ... அப்புறம் என்ன ஸார் இருக்கு? வெறும் பெருங்காய டப்பாதான். பழைய பெருமையைப் பேசிக்கிட்டே இருக்கலாம்" என்றார் அவர்!

-தில்லப்பா

படம் : யோகா

# இனி, 'கறார்' பேசாது கம்ப்யூட்டர்!

"குளிக்கத் தண்ணி எடுத்து வை."

"நீங்க என்னத்தை வெட்டி முறிக்கிறீங்க? பொழுது விடிஞ்சாப் பல்லை வெளக்கிட்டுப் பேப்பரைப் பிரிச்சு வச்சுக்கிட்டு உக்காந்துட வேண்டியது... இங்கே ஒருத்தி கெடந்து தனியா லோல்படறாளேன்னு ஒரு சவு இரக்கம் வேணாம்... சரிசரி சொல்லுங்க... பச்சைத் தண்ணியா... சுடுதண்ணியா...?"

"வெதுவெதுன்னு வை."

திருமதி புரிந்துகொள்வார். வார்த்தை சூடாக இருந்தாலும், தண்ணீர் வெதுவெதுப்பாகக் குளியலறை போய்ச் சேர்ந்துவிடும்.

மனைவியின் இடத்தில் கம்ப்யூட்டர் இருந்தால்?

"வெதுவெதுப்பா? அதெல்லாம் தெரியாது... சூடா இல்லை ஜில்லுனு... ரெண்டுலே ஒண்ணு கேளுங்க..."

கம்ப்யூட்டரின் இந்தக் கறார்த்தனத்துக்குக் காரணம் மின்சாரம்.

ஒவ்வொரு கம்ப்யூட்டருக்கு உள்ளேயும் சிலிக்கன் சில்லுகள். ஒவ்வொரு சில்லுக்கு உள்ளேயும் லட்சக்கணக்கான 'டிரான்சிஸ்டர்' என்ற நுண்கருவிகள். டிரான்சிஸ்டரில் மின்சாரம் பாய்கிறபோது ஒரு நிலை. மின்சாரம் இல்லாத போது மற்றொரு நிலை... அடிப்படை இதுதான்.

எந்த மொழியில் எந்த ஆணைத் தொடரை எழுதினாலும், அதைப் பூஜ்யமாகவும் ஒன்றாகவும் மாற்றித்தான் கம்ப்யூட்டர் புரிந்து கொண்டு செயல்படும். ஒன்று என்பது 'உள்ள நிலை'. பூஜ்யம் என்பது 'இல்லாத நிலை.'

இருமைத் தத்துவம் (Binary Logic) என்ற இந்தக் கோட்பாட்டின்படி எதிலுமே இரண்டு நிலைதான்... உண்மை - பொய், வெளிச்சம் - இருட்டு, சரி - தப்பு, குளிர்ச்சி- வெப்பம், வெண்மை - கறுப்பு...

பைனரி காதல் என்றால், உம்மா - கும்மா.

கம்ப்யூட்டர் காதலிக்க வேண்டாம்... கொஞ்சம் போலாவது மனிதனைப் போலச் சிந்திக்க வைக்கலாமே என்று நினைத்தவர்களை இந்த 'இருமை' மேற்கொண்டு போக விடாமல் தடுத்தது.

தடையை மீறி நடைபோட, 'கொஞ்சம் போல', 'சற்றே கூடுதலாக', 'ஏறக்குறைய', 'பாதி சரி - பாதி தப்பு' போன்ற நம் வளமுறைகளைக் கம்ப்யூட்டருக்குக் கற்றுக் கொடுக்க ஏற்பட்டதுதான் மசங்கல் தத்துவம் என்ற ஃபஸ்ஸி லாஜிக் (Fuzzy Logic).

**1965**-ல் கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில், லோத்பி சாதிக் என்ற பேராசிரியர் மசங்கல் தத்துவத்தை முன்மொழிந்தபோது ஏகப்பட்ட எதிர்ப்பு.

"அனாசாரம்... இதை வைத்து வேலை பார்த்தால் அனர்த்தம்தான்" என்று அறிவியல் ஆராய்ச்சிக்காகக் கோடி கோடியாகப் பணத்தைக் கொட்டிக் கொடுக்கும் நிறுவனங்கள் கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டன. இதுபற்றிக் கட்டுரை எழுதி அறிவியல் பத்திரிகைகளுக்கு அனுப்பினால், மறுதபாலில் திரும்பி வந்து சேர்ந்தது.

தன் முயற்சியில் சற்றும் தளராத பேராசிரியர் சாதிக், "போங்கடா போங்க" என்று அமெரிக்காவைப் புறக்கணித்து ஜப்பானைக் கூப்பிட்டார். ஓடோடி வந்து மசங்கல் தத்துவத்தை வாரி எடுத்துப் போன ஜப்பானியர்கள், வாஷிங் மிஷினிலிருந்து வாக்குவம் கிளீனர் வரை சகலமானதிலும் அதைப் புகுத்திக் காசு பண்ணத் தொடங்கிவிட்டார்கள்.

'முழு உண்மை அல்லது அப்பட்டமான பொய் என்று இல்லாமல், உண்மையும் பொய்யும் கலந்தே இருக்கும்' என்ற சகஜமான பார்வை கொண்டது புத்த மதம். பௌத்தம் வளர்ந்த பூமி என்பதால், ஜப்பான் போன்ற கிழை நாடுகள் அதே ரீதியான மசங்கல் தத்துவத்தையும் சிரமமில்லாமல் ஏற்றுக் கொண்டன.



- மேதாவிகள் சொல்கிற இந்த விளக்கம் முழுக்க உண்மையாகவோ, பாதி உண்மையாகவோ இருக்கலாம்.

இப்படி ஜப்பானை வெற்றி கொண்ட மசங்கல் தத்துவம், அமெரிக்காவுக்குத் திரும்ப இறக்குமதியாக, அங்கேயும் அதைச் சுறுசுறுப்பாக நடைமுறைப்படுத்த ஆரம்பித்தார்கள். முக்கியமாகக் கம்ப்யூட்டர்களில்.

'மின்சாரம் பாய்கிற நிலை' 'இல்லாத நிலை' என்ற இருமைக்கு முன்பாரம், பின்பாரமாக மசங்கல் தத்துவத்தை வைத்துக் கம்ப்யூட்டரின் கறாரையும், கண்டிப்பையும் குறைக்க வழி செய்தார்கள்.

மனிதனைப் போலச் சிந்திக்கக் கம்ப்




பூட்டருக்குச் சொல்லித் தருவதில் சிக்கல் குறைய, மூளைவலை (Neural Network) ஏற்படுத்துகிற காரியம் சற்று எளிமையானது.

போக்குவரத்தை ஒழுங்குபடுத்த ஏற்பட்ட மூளை வலைகள், நாலா திசையிலும் வாகன இயக்கத்தைத் தொடர்ந்து அவதானித்து, சிக்னல்களை அதற்கேற்றபடி நேரம் கூடுதலாக, குறைவாகக் காட்டி மாற்ற, மசங்கல் தத்துவம் தான் அடிப்படை.

**க**ம்ப்யூட்டருக்கு வெளியே மசங்கல் தத்துவம் எப்படிச் செயல்படுகிறது?

மசங்கல் தத்துவம் கொண்ட சலவை யந்திரம் இதோ இயங்கத் தயாராகிறது.

அழுக்குத் துணிகளை எல்லாம் உள்ளே போட்டு, சோப்புத் தூளையும் அதற்கான இடத்தில் நிரப்பி, தண்ணீர்க் குழாயை இணைத்து, சுவிட்சைப் போடுகிறோம்.

யந்திரத்திலுள்ள மைக்ரோபிராசசர், முதலில் துணியின் எடையைக் கணக்கிடுகிறது. இந்த அளவு 'மிக அதிகம்', 'கொஞ்சம் போல அதிகம்', 'குறைவு', 'மிகக் குறைவு' என்பது போல மாற்றி அமைத்துக் கொள்ளப்படுகிறது.

கையளந்ததைக் கண் அளந்தது போன்ற மதிப்பீடாக மாற்றுகிற இந்த முதல் படிக்கு மசங்கலாக்குதல் (Fuzzification) என்று பெயர்.

இதற்கு அடுத்த நடவடிக்கை வழி காணுதல் (Rule Evaluation).

அதிகத் துணி என்றால் அதிகமாக சோப்புத் தூள் கலந்து அதிக நேரம் துவைக்க வேண்டும் என்பது போல வழி காணப்படுகிறது.

அடுத்து, அதிக சோப்புத்தூள் என்றால் எவ்வளவு, அதிக நேரம் என்றால் எத்தனை நிமிடம் என்று துல்லியமான அளவுகளாகக் கணக்கிடப்படுகிறது. இது தெளிவுபடுத்துதல் (Defuzzification)

நாம் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்க, எல்லாக் கணக்கும் போட்டு, வெள்ளை வெளேர் சலவை முடிந்துவிடும்.

எடை மட்டுமில்லை... எவ்வளவு அழுக்கு... என்ன மாதிரித் துணி என்றும் தீர்மானித்து அதற்கு ஏற்றாற்போல சலவை செய்ய, இப்படிப்பட்ட வாஷிங் மிஷினில் வகையுள்ளது.

மசங்கல் தத்துவப்படி அமைந்த டெலிவிஷனில், அறையின் வெளிச்சத்தைப் பொறுத்துத் திரையில் வெளிச்சத்தைக் கூட்டவும் குறைக்கவும் இதேபோல வழிமுறையுள்ளது.

இந்தத் தத்துவம் கொண்ட வாக்குவம் கிளீனர், தரையமைப்பு, தூசியளவு இவற்றைப் பொறுத்து வேகமாகவோ, மெல்லவோ இயங்கி, 'கறுப்பு வளையல் கையுடன் ஒருத்தி குனிந்து வளைந்து கூட்டிப் போனது போல' துப்புரவு செய்ய, அறை சுத்தமாகும். மனசு குப்பையாகாது.

வெதுவெதுப்பான வெந்நீர் வேண்டும் என்றால், மனைவியரை நேசிக்கிற கணவர்கள் 'மசங்கல் தத்துவம் கொண்ட வாட்டர் ஹீட்டர்' என்று கேட்டு வாங்குவார்கள்.

உங்க வீட்டுலே எப்படி?

**- இரா. முருகன்**

# பிரமிப்பூட்டும் சில உயிரினங்கள் நமக்குக் கற்றுக் கொடுப்பது...



எல்லா உயிரினங்களுமே ஆபத்திலிருந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்ள நிரந்தரமாகப் போராடி வருகின்றன. அவை தம்மைத்தாமே காப்பாற்றிக் கொள்ள இயற்கை அவைகளுக்கு அற்புதமான ஆயுதங்களை அளித்துள்ளது. பொதுவாக தோலின் விசித்திரமான நிறமே அவற்றின் அருமையான போர்வையாக ஆகிறது அல்லது அவற்றின் முரட்டுத்தோல் எதுவும் ஊடுருவ முடியாதபடி பாதுகாக்கிறது.

**கொண்டை முள்ளம்பன்றி** *(The Crested Porcupine)*

கொறிக்கும் வர்க்கத்தைச் சேர்ந்த இப்பிராணி ஆப்பிரிக்காவிலும், ஆசியாவிலும் காணப்படுகிறது. வலுவும் கூர்மையுமுள்ள, சுமார் 50 செ.மீ. நீளமான முட்கள் முடியைப் போல் இதன் முதுகை மூடியிருக்கிறது. இதன் உதவியால் இந்த முள்ளம்பன்றி தன்னைத் தாக்க வரும் எதிரிகளிடமிருந்து பாதுகாத்துக்கொள்கிறது.

தனது வருமானத்திற்குள் வாழ்வதும் வருங்காலத்திற்காகச் சேமிப்பதும் வழிவழியாக நாம் பின்பற்றி வரும் கொள்கைகள் ஆகும். அப்போதுதான் நாம் எப்பொழுதும் சமுதாயத்தில் தலைநிமிர்ந்து மாற்றுக் குறையாமல் மதிப்புடன் வாழ முடியும். ஆனபோதிலும் இந்த நவீன உலகத்திலே விலைவாசி உயர்வை சமாளிப்பது அவசியமாக உள்ளது. குழந்தைகளின் படிப்பு, திருமணம் இவற்றிற்காகவும் சொந்த வீடு, டி.வி, ஃபிரிட்ஜ், டூ-வீலர் முதலியவற்றை வாங்கவென்றும் மற்றும் தொடர்ந்து ஏற்படும் செலவுகளைச் சமாளிக்கவும் அதற்காகச் சேமிக்கவும் வேண்டிய கட்டாயங்கள் உள்ளன. சேமிக்கவும் வேண்டும், அதே சமயம் உங்களது அந்தச் சேமிப்பு, தேவை ஏற்படும்போது உங்களுக்கு உதவவும் வேண்டும். என்னாளும் நாம் சமுதாயத்தில் தலை நிமிர்ந்து மாற்றுக் குறையாமல் மதிப்புடன் வாழ அப்படிப்பட்ட வழி ஏதேனும் இருக்கிறதா?

# THE VALUE *of* PROTECTION

ராம் காஷ்யப் உங்களது தேவைகளைப் புரிந்து கொள்கிறது. அத்துடன் காலத்தை வென்று நிற்கும் தனது சீட்டுத் திட்டங்களால் அவ்வித உத்திரவாதத்தை அளிக்கிறது. அத்துடன் சேமிப்பு என்பதை மாதாந்திரப் பழக்கமாக ஆக்கி வருகிறது. உடனடித் தேவைகளுக்காக உங்களது செல்வத்தைக் காக்கும் கவசமாகச் செயல்பட்டு வருகிறது.

ராம் காஷ்யப் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட்டுடன் நீடித்த உறவு தொடர்ந்து நிலவட்டும்.

**நீங்கள் என்றுமே சீட்டுச் சந்தாதாரராக இருந்ததில்லை என்றால் எங்களுக்கு எழுதுங்கள். எந்தவித நிர்ப்பந்தமும் இல்லாமல், எமது அதிகாரிகள் உங்களை சந்தித்து விவரங்களை எடுத்துக் கூறி விளக்குவார்கள்.**



***Ram Kaashyap***

Chits Private Limited

(Member Ram Kaashyap Group)

**நிர்வாக அலுவலகம் :** 1/1 சர் தேசிகா ரோடு (அடித்தளம்),
ஆழ்வார்பேட்டை சிக்னல் அருகில், சென்னை 600 004.
போன்: 4994303, 4998325

**கிளைகள் : சென்னை :** • **மைலாப்பூர்** • **மேற்கு மாம்பலம்** – போன்: 4896638 • **அண்ணா நகர்** – போன்: 610979 • **அடையாறு** – போன்: 418081 • **கோயம்புத்தூர்** – போன்: 231886 • **கும்பகோணம்** – போன்: 24221 • **மதுரை** – போன்: 541802 • **தஞ்சாவூர்** – போன்: 25871 • **திருச்சி** – போன்: 704752 • **ஈரோடு** • **திருவாரூர்**

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தேர்வு**

Insight-1550




**தா**ஜ்மகால் பற்றி எவ்வளவோ படித்திருக்கிறோம். அப்போதெல்லாம் அது பற்றி அத்தனை அதிசயம் உண்டானதில்லை; நேரில் பார்த்தபோதுதான் உண்டானது. ஆக்ரா ரயில்வே ஸ்டேஷனிலிருந்து தாஜ்மகாலுக்கு டாக்ஸி பிடித்துச் சென்றோம். தாஜ்மகால் கண்ணுக்குத் தெரிந்தபோது, ஏதோ நிலவை நோக்கிச் செல்வது போன்ற சிலிர்ப்பு! வாழ்க்கையில் எதற்குமே ஆசைப்படாத நான் அப்போது... அடுத்த விநாடியில் தாஜ்மகால் அருகே போய் விட மாட்டேனா என்று துடித்தேன்; அத்தனை அழகு! காலமெல்லாம் அங்கேயே இருந்துவிடக் கூடாதா என்று தவிக்கச் செய்து விட்டது அது!

தாஜ்மகாலின் நுழைவாயிலில் 'எங்களால் தாங்க முடியாத துயரத்தைத் தாங்குவதற்கு உதவி செய் கடவுளே!' என்று ஷாஜஹான் எழுதி வைத்திருக்கிறான். அது மேலும் சிலிர்க்க வைத்து விட்டது என்னை.

திருச்சி-8, எம்.கதிஜா ஹனீபா.

# நிலாவுக்குச் சென்ற அனுபவம்!

## தொலைந்த பணமும் ஆட்டோ டிரைவரும்!

**சி**ல மாதங்களுக்கு முன்பு மதுரையிலுள்ள உறவினர் வீட்டுக்குச் சென்றிருந்தோம். அப்போது இன்னொரு உறவினர் வீட்டுக்குச் சென்று விட்டுப் பழையபடி ஆட்டோவில் திரும்பும் போது இரவு வெகு நேரமாகி விட்டது. வந்த பிறகும் வெகுநேரம் கழித்துத்தான் எங்களது பணப்பை காணாமல் போனது தெரிய வந்தது.

வருத்தத்தோடு ஊர் திரும்பினோம். திரும்பிய மூன்று நாட்களில் கல்லூரியில் படிக்கும் என் மகன் கல்லூரியிலிருந்து போன் செய்து, தொலைந்து போன எங்கள் பணப்பை கிடைத்து விட்டதாகச் சொன்னபோது ஆச்சரியமாயிருந்தது. எப்படிக் கிடைத்தது?

நாங்கள் பயணம் செய்த ஆட்டோ டிரைவர் மறுநாள்தான் எங்கள் பணப்பை ஆட்டோவில் இருப்பதைப் பார்த்திருக்கிறார். அதில் என் மகன் பெயரும் அவன் படிக்கும் கல்லூரி முகவரியும் இருக்கவே, தபால் நிலையம் சென்று போஸ்ட் மாஸ்டரிடம் விஷயத்தைச் சொல்லி அனுப்பக் கோரியிருக்கிறார். அவரோ, விடுமுறைக்கு வந்திருக்கும் தமது தங்கை படிக்கும் கல்லூரிதான் அது என்றும், விடுமுறை முடிந்து அடுத்தநாள் அவள் புறப்பட்டுப் போவதால் அவளிடமே கொடுத்து சேர்க்கச் சொல்வதாகச் சொல்லி, அதன்படியே கொடுத்தனுப்பியிருக்கிறார். அந்த ஆட்டோ டிரைவரின் செயலை நினைத்துச் சிலிர்த்துப் போனேன்.

கோவைப்புதூர், பொன்னம்பலம்




# பெஸ்ட் பெனிபிட் பண்ட் லிமிடெட்

(மத்திய சர்க்காரால் இந்திய கம்பெனிகள் சட்டம் 1956-ன் கீழ் பதிவு செய்யப்பட்டது)

**தலைமை கார்யாலயம்** (விடுமுறை இல்லை) : 3-வது மாடி, சாந்தி காம்ப்ளெக்ஸ், 26, ரங்கநாதன் தெரு, தி.நகர், சென்னை - 17. Ph : 4348560/4347025

**நங்கநல்லூர் கிளை** (ஞாயிறு வேலை நாள்) : 13, கல்லூரி சாலை, சென்னை - 600 114.
BM : P. தியாகராஜன், மாஜி கிரைண்ட்லேஸ் பேங்க்.

**குரோம்பேட்டை கிளை** (ஞாயிறு வேலை நாள்) : 5, 2வது பிரதான சாலை, நியூ காலனி, சென்னை - 600 044.
BM : S. இராஜகோபால், M.Sc., CAIIB, மாஜி இந்தியன் பேங்க்.

**தாம்பரம் சானடோரியம் கிளை** (ஞாயிறு வேலை நாள்) : 7, ஸ்டேஷன் ரோடு, சென்னை - 600 047.
BM : R. V. இராமமூர்த்தி, மாஜி கிரைண்ட்லேஸ் பேங்க்.

**1. வாடிக்கையாளர் வசதி திட்டம் : ™**

*30 நாட்கள் - 18% 45 நாட்கள் - 19% 60 நாட்கள் 20% 90 நாட்கள் 21% வேண்டும்போது பணம் எடுத்துக் கொள்ளலாம். குறிப்பிட்ட காலம் முடிந்தவுடன் புதுப்பிக்க வரவேண்டிய அவசியமில்லை.*

**2. பென்ஷனர்/பொதுஜன பாதுகாப்புத் திட்டம் : ™**

*1 வருடம் - 22%; 2 வருடம் - 23%; 3 வருடம் - 24%*

**3. அதிகபட்ச வருவாய் திட்டம்/சுமங்கலி கல்யாணத் திட்டம் : ™**

| டெபாசிட் தொகை | முடிவில் கிடைக்கும் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 40 மாதம் | 60 மாதம் |
| ரூ. 1,000 | ரூ. 1,240 | ரூ. 1,533 | ரூ. 1,880 | ரூ. 2,000 | ரூ. 3,000 |
| ரூ. 5,000 | ரூ. 6,200 | ரூ. 7,665 | ரூ. 9,400 | ரூ. 10,000 | ரூ. 15,000 |

**4. குழந்தைகள் எதிர்கால பாதுகாப்பு திட்டம்/பெஸ்ட் பாண்ட் ஸ்கீம் : ™**

*ரூ. 1,000 பத்து வருடங்களில் ரூ. 10,740 ஆகும். 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும்.*

**5. முன் கூட்டிய வருவாய் திட்டம் : ™**

*டெபாசிட் காலத்திற்கான முழு வட்டியும், டெபாசிட் செய்யும் தேதியன்றே தரப்படும். 1 வருடம் 18%.*

**6. தாத்தாவின் பரிசுத் திட்டம் : ™**

*ரூ. 1,000 15 வருடங்களில் ரூ. 35,250 ஆகும். 10 வருடங்களில் ரூ. 10,740 ஆகும்.*

**7. சேவிங்ஸ் பேங்க் : 14% ;** ™ : டிரேட்மார்க்

**உங்கள் வீட்டிற்கும் வந்து சேவை செய்கிறோம்**

***BBF — THE CUSTOMER CONSCIOUS MAHASHAKTHI*** ™
***BBF — THE CUSTOMER FRIENDLY MAHABANK*** ™

CHAIRMAN
Prof. V. VIVEKANAND B.Com (Distn), MBA (Distn), CAIIB (All India First), EKSAMD (Distn.) (GERMANY) IAS (Topper).

**Dr. PARMESWARI, M.B.B.S.**
**VICE CHAIRMAN**

## 13. சீனத்து இடி முழக்கம்

தமிழ் மண்ணில் அடியெடுத்து வைத்து விட்ட காரணத்தினாலோ, அல்லது தன் சகோதரி பவானியைக் காண வேண்டும் என்ற ஆவலினாலோ, தெற்கு நோக்கிப் பாய்ந்த காவிரியின் நடை பெரும் துள்ளலாகவே இருந்தது. கொங்கு நாட்டிற்கும் போசள நாட்டிற்கும் இடைப்பட்ட பகுதியென்பதால் இடைப்பாடி நாடு எனப் பெயர் பெற்று விட்ட அந்த வட கொங்குப் பகுதியில் காவிரியின் கிழக்கில் செழித்த வயல்களும் மேற்கில் அடர்ந்த வனமுமாக இருந்தது. எண்ணற்ற மூலிகைகளுடன், சந்தனமும் தேக்குமாக நிறைந்து கிடந்தாலும் துஷ்ட மிருகங்கள் அதிகம் உலவியதால் அந்த வனப் பகுதியில் மனித சஞ்சாரம் என்பது அறவே அற்றுப் போய், கோரைப் பற்களும் கூர் நகங்களும் வைத்ததே அங்கு சட்டமாக இருந்தது.

# இந்திர தனுசு

அவ்வப் பொழுது ஒலித்த உறுமல்களும், கர்ஜனைகளும் வேடுவர்கள் கூட அங்கு அதிகம் உலவுவதில்லை என்பதை நிரூபித்தன.

ஆனால் இயற்கையின் எந்தச் செல்வத்தையும் விட்டு வைக்க மனிதன் ஒப்புவதில்லையென்பதையும் நிரூபிக்க, காவிரியின் ஓரங்களில் மரங்கள் வெட்டப்பட்டு சாய்ந்து கிடந்தன. வனத்தின் முகப்பில் வெறும் அடிமரங்கள் நின்றன.

மாலைப் பொழுது முற்றி இருள் கவியத் துவங்கு முன்பாகவே கருத்த மேகங்கள் கார்காலம் நெருங்கி விட்டதை அறிவுறுத்தின. தெற்கிலிருந்து வேகமாக வந்து வானை மூடி இருள் கவியச் செய்து விட்டன. துஷ்ட மிருகங்களின் நடமாட்டம் இனி அதிகரித்து விடும் என்று உணர்ந்ததால், மரங்களை வெட்டிக் கொண்டும் அடுக்கிக் கொண்டுமிருந்த பணியாட்களை விரைவில் அக்கரைக்குச் செல்லும்படி போசள வீரர்கள் ஏவிக் கொண்டிருந்தார்கள். பன்னீர் தெளிப்பது போல் தெறிக்கத் தொடங்கிய மழைச் சாரலையும், பெரும் அரக்கன் ஒருவன் வாயைக் குவித்து ஊதுவதுபோல் விட்டு விட்டு வீசத் தொடங்கிய ஊதற்காற்றையும் லட்சியம் செய்யாமல், வெட்டப்பட்ட மரங்களைச் சுமந்த பணியாட்கள், காவிரியின் கரைகளை இணைத்த மரப்பாலத்தின் வழியே நடந்து சற்றுத் தூரத்தில் தெரிந்த இடைப்பாடி நாட்டுக் கோட்டையை நோக்கி விரைந்தனர்.

கோட்டைக் கதவுகளினூடே நுழைந்து முன்புறமிருந்த இரு உயரமான மாளிகைகளையும் கடந்து, பின்புறம் வீரர்கள் அணி வகுப்புக்கென்றே ஏற்பட்ட திடலில் மரங்களைக் கொண்டு சேர்த்து விட்டு, அருகிலிருந்த கூடாரங்களில் ஒதுங்கி நின்றனர்.

அந்தக் கூடாரங்களிலேயே சற்று பெரிதாகவும் நடுநாயகமாகவும் விளங்கிய ஒரு கூடாரத்தின் வாயிலுக்கு நேர் எதிரில் உட்புறமாக இருந்த மரப்பலகையொன்றில் அமர்ந்து, வெளியே திடலில்



இறைந்து கிடந்த மர உருளைகளையும், கூடைகள் போல் செதுக்கப்பட்ட மரங்களையும் வெறித்துப் பார்த்தபடி அமர்ந்திருந்தான் ஒரு மனிதன். அவன் மஞ்சள் முகமும், சிறுத்த விழிகளும், பகரவடிவ மீசையும் அவன் ஒரு சீனன் என்பதைத் தெரிவித்தன. பார்வைக்கு மெலிந்து காணப்பட்டாலும் அவன் தேகம் வைரம் பாய்ந்து இறுகித் தெரிந்தது. அந்த சீனனின் அருகில் நின்று அவனிடம் இரைந்து ஏதோ கூறிக் கொண்டிருந்தான் சற்று படாடோபமான உடையுடன் இன்னொருவன். ஆனால் அந்த சீனனின் பார்வை அந்த மனிதனை நோக்கித் திரும்பியதாகவோ, அவன் கூறுவதை கவனித்ததாகவோ தெரியவில்லை.

தான் கூறியதைக் கேளாமலும் பதிலேதும் கூறாமலும், மரங்களை வெறித்துக் கொண்டிருந்த சீனனின் போக்கு, பக்கத்தில் நின்றவனுக்குப் பெரும் ஆத்திரமேற்படுத்தியிருக்க வேண்டும் என்பது அடுத்து அவன் இரைந்ததிலிருந்து தெரிந்தது.

"யாங்சின், நான் கூறியது உன் செவிகளில் விழுந்ததா இல்லையா?" இரைந்தான் அந்த மனிதன்.

யாங்சின்னின் மஞ்சள் முகமும் சிறிய விழிகளும் அந்த மனிதனை நிதானமாகத் திரும்பி நோக்கின. "என் செவிகளுக்கு இதுவரை பழுதொன்றுமில்லை சிங்கணா" என்ற பதிலும் வெகு அலட்சியமாக வந்தது அவனிடமிருந்து.

போசாளத் தண்ட நாயகனும், பெரும் தந்திரசாலியென்று பெயரெடுத்தவனும், ஏறக்குறைய பாதி தமிழகத்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருந்தவனுமான சிங்கணனுக்குத் தன்னை அந்த சீனன் சர்வ சாதாரணமாகப் பெயர் சொல்லி அழைத்தது இன்னும் ஆத்திரமேற்படுத்தியிருக்க வேண்டும். இன்னும் சற்று உக்கிரமாகவே இரைந்தான் அவன், "நான் கேட்ட கேள்விக்கு இன்னும் உன்னிடமிருந்து பதில் வரவில்லை யாங்சின்!" என்று.

"என்ன கேட்டாய் நீ?" யாங்சின்னின் பதிலும் கேள்வியாகவே வந்தது.

"யந்திரப் பொறிகள் இன்னும் ஒரு திங்களுக்குள் தயாராகி விடுமா என்று கேட்டேன்...."

"ஆகாது..."



யாங்சின்னின் பதில் திட்டமாக வந்தது.

"ஏன் ஆகாது?" சிங்கணன் மீண்டும் இரைந்தான்.

"இவை அரண்மனை உபயோகத்திற்குச் செய்யப்படும் சாதாரண மரப் பொருட்கள் இல்லை சிங்கணா, அனைத்தும் போர்க்கருவிகள். செய்யும் முறையில் சிறு பிழை ஏற்பட்டாலும் பயன் தராது."

மேற்கொண்டு ஏதோ கூற வந்த சிங்கணன் போசள வீரன் ஒருவன் நனைந்தபடியே ஓடி வருவதைக் கண்டு நிதானித்தான்.

வீரன் சிங்கணனை அடைந்ததும் தலை வணங்கி, "படைத் தலைவரே, உத்தமபாளையத்திலிருந்து முக்கிய சேதியுடன் ஒருவன் தங்களைக் காண வந்திருக்கிறான்" என்றான்.

சிங்கணன் முகத்தில் சிந்தனை படர்ந்து.



"பந்துல தேச்சுக்க எச்சில் வேணும் இறதுக்காக இப்படி நாக்கைத் தொங்கப் போட்டுக்கிட்டு ஒரு நாயை தோள் மேல் வைச்சுக்கிட்டே நீங்க 'பௌல்' பண்றதை ஒத்துக்க மாட்டேன்!"

– கிரிஜா மணாளன்

"சரி, வரச்சொல்" என்று உத்தர விட்டான்.

சற்று நேரத்தில் அரை ஓட்டமாக, நனைந்தபடியே வந்தவன் நீண்ட பயணத்தில் களைத்திருந்தது அவன் முகத்தில் தெரிந்தது. சிங்கணனை வணங்கி நிமிர்ந்தவனின் பார்வை அருகில் அமர்ந்திருந்த யாங்சின்னைக் கண்டதும் ஏதோ பிசாசைக் கண்டவன் போல மருண்டது. அவன் குரலும் குழறியபடி வந்தது. கச்சையிலிருந்து ஓலைக்குழலை எடுக்கச் சென்ற கரமும் திசைமாறி, யாங்சின்னைக் காட்டியது. "இவன்... இவன்" என்று குழறினான் அந்த வீரன்.

அவன் குழப்பத்துக்கும் குழறலுக்கும் காரணம் புரியாத சிங்கணன் முகத்தில் மீண்டும் சினம் ஏறியது. "வீரனே, நீ கூறவந்ததை உடனடியாகக் கூறு" என்று உத்தரவிட்டான்.

அந்த வீரன் குழறியபடியே "பிரபு, இவனை இரு தினங்களுக்கு முன்பு உத்தமபாளையத்தில் கண்டேன்" என்றவன், யாங்சின்னை சற்று உற்று நோக்கி, "இல்லையில்லை. அவன் இன்னும் இளைஞனாக இருந்தான். அவன் கழுத்தில் கடல் நாகம் பொறித்த பதக்கம் ஒன்றும் இருந்தது" என்றான்.

யாங்சின்னின் முகத்தில் மெலிதான முறுவல் ஒன்று பிறந்தது. அவன் மஞ்சள் முகமும் சிறு விழிகளும் அந்த வீரனை நோக்கித் திரும்பின.

வெளியே வானத்தில் மேகங்கள் வேகமாக மோதி பளீரென்ற மின்னல்களுடன் பலமாக இடி முழக்கம் செய்யத் தொடங்கின.

"பேச்சு வெளிவரும் வரை ஒரு முட்டாள் அறியப்படுவதில்லை" என்று வடமொழி வாக்கியம் ஒன்று கூறுகிறது. உண்மையே ஆனாலும் தக்க இடத்தில்தான் அதைக் கூற வேண்டும் என்றும் அது கூறுகிறது. உத்தமபாளையத்திலிருந்து வந்த வீரன், உளறிவிட்ட சொற்களின் பொருள் சிங்கணனுக்கு ஏதும் விளங்கவில்லையென்றாலும் யாங்சின்னுக்குப் புரிந்து விட்டதால் அதுவரை லேசாக வாடிக் கிடந்த அவன் முகத்தில் ஒரு மலர்ச்சியும் இதழ்களில் ஒரு முறுவலும் நெளியத் தொடங்கின. வந்த வீரனை சிங்கணன் இழுத்துச் செல்லாத குறையாக மாளிகைக்கு அழைத்துச் சென்று விட்ட பிறகும் அப்படியே அமர்ந்திருந்த யாங்சின்னின் முகத்தில் இலேசான சிந்தனையும் படர்ந்தது.

சட்டென்று ஏதோ தீர்மானத்திற்கு வந்த யாங்சின், சற்றுத் தள்ளியிருந்த கூடாரங்களில் மழைக்கு அஞ்சி ஒதுங்கி நின்ற தச்சர்களை, கைகளைத் தட்டி அழைத்தான். அவர்களால் செய்யப்பட்ட மர உருளைகளையும் இன்னும் சில மரப் பொருட்களையும் கொண்டு வரப் பணித்தவன், அவற்றில் சிலவற்றை மட்டும் தேர்ந்தெடுத்து உளியையும் சுத்தியலையும் கொண்டு செதுக்க ஆரம்பித்தான். இன்னும் வேகத்துடன் தொடர்ந்த மழையையோ, இரவு ஏறத் தொடங்கிவிட்டதையோ அவன் லட்சியம் செய்ததாகத் தெரியவில்லை. நெடு நேரம் நின்றுவிட்டு தச்சர்கள் மெள்ள கலைந்து சென்ற பின்பும் சீனனின் கரத்திலிருந்த சுத்தியலின் சப்தம் ஓயவில்லை. கூடாரத்தின் வாசல் புறம், மழைச் சாரல் எட்டாதவாறு பொருத்தப்பட்டிருந்த தீப்பந்தத்தின் ஒளியில் அவன் பணி தொடர்ந்தது.

கதிரவன் உதிக்கும் நேரம் வரையிலும் கூட மழை ஓயவில்லை. மேகங்கள் கலைய மனமின்றி அங்கேயே நிலைத்தன. முற்றிலும் இருள் விலகாத அடுத்த தினத்தின் காலைப் பொழு

தில் விழித்தெழுந்து வெளியே வந்த தச்சர்கள் பிரமித்து நின்றார்கள்.

யாங்சின்னின் கூடார வாயிலில் முழு வடிவில் அமைக்கப்பட்ட யந்திரப் பொறி ஒன்று நின்றிருந்தது. பெரும் வில் போன்ற அதன் அமைப்பையும் உச்சியில் அமைக்கப்பட்டிருந்த மரக்கூடையின் அகலத்தையும் இணைப்புக்களில் பயங்கரமாகத் தெரிந்த பெரும் மரப் பற்களையும் கண்டு ஆச்சர்யத்தில் உறைந்து நின்ற தச்சர்கள், யாங்சின்னை ஏதோ பிசாசைப் பார்ப்பது போலப் பார்த்தார்கள். அவர்களில் இருவர் சிங்கணனுக்குச் சேதி சொல்ல மழையில் நனைந்தபடியே மாளிகையை நோக்கி ஓடவும் செய்தார்கள்.

சற்று நேரத்தில் அரை ஓட்டமாக வந்து நின்ற சிங்கணன் தன் கண்ணெதிரில் எழுந்து நின்ற காட்சியை நம்ப இயலாதவன் போல் வெறித்து நோக்கினான். அவன் முகத்தில் திகைப்பும், ஓரளவு அச்சமும் சந்தேகமும் கூடத் தோன்றின.

சிங்கணனின் பின்புறமிருந்து ஒலித்தது யாங்சின்னின் குரல் : "சிங்கணா, இது தமிழகத்தின் இடங்கணிப் பொறி. இளைய பாண்டியர் வடிவமைத்தவற்றில் சில மாறுதல்களைச் செய்திருக்கிறேன். இதை நகர்த்துவதற்கு உரிய சக்கரங்களும், அச்சும், அந்த எறிகூடையை வில்லுடன் இணைக்கும் நாணும் மட்டுமே பொருத்த வேண்டும்."

பிரமிப்பு நிரம்பிய பார்வையை யாங்சின்னின் மீது வீசிய சிங்கணன், "கல்யாணபுரத்திலிருந்து அச்சுக்களும் நாண் பூட்ட மணிக் கயிறுகளும் கொண்டுவர இப்பொழுதே உத்தரவிடுகிறேன் யாங்சின்" என்றான்.

கருங்கல்லின் மீது வரிசையாக குறுவாட்களை எறிந்தது போல நகைத்தான் யாங்சின்.

"ஏன் நகைக்கிறாய்?" என்ற சிங்கணனின் கேள்வியில் இலேசான அச்சமிருந்தது.

நகைப்பதை நிறுத்திய யாங்சின்னின் சிறு விழிகளில் ஏளனம் வழிந்தது. "சிங்கணா, சாளுக்கிய கல்யாணபுரத்திலிருந்து வரும் அச்சுக்களைப் பொருத்த இவை பவனி ரதங்கள் அல்ல. ஐம்பதுக்கும் மேற்பட்ட பெரும் எரியம்புகளையும், பாறைகளையும் வீசவல்லவை. நூற்றுக் கணக்கில் வீரர்களையும், பெரும் கோட்டைக் கதவுகளையும் நொடியில் அழிக்க வல்லவை. நீ கொண்டுவரக்கூடிய அச்சு இதன் முதல் சுழற்சியிலேயே முறிந்து விடும்."

"பின் இந்த யந்திரத்திற்கான அச்சு எங்கு கிடைக்கும்?" சிங்கணனின் கேள்வியில் குழப்பம் ஒலித்தது.

யாங்சின்னின் பதில் நிதானமாக வந்தது: "பெரும் ஆலயத் தேர்களுக்கும், இது போன்ற யந்திரப் பொறிகளுக்கும் முறிபடாத அச்சுக்



# அருள்வாக்கு

நடைமுறை உலகில் மநுஷ்யர்கள் எல்லோரும் "பணமே வேண்டாம்" என்று இருப்பது சாத்தியமே இல்லை. "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்று திருவள்ளுவரே சொல்லிவிட்டார். ஆனாலும் அவசியமில்லாமல் ஏராளமாகச் சம்பாதிப்பதும் அவசியமில்லாமல் விரயமாகச் செலவழிப்பதும், அல்லது பூதம் காத்த மாதிரி பாங்கில் மூட்டை மூட்டையாகப் போட்டு வைப்பதும் ரொம்பப் பிசகு. போதும் என்ற மனசோடு சம்பாதனம் செய்து, அதைக் கவனத்துடன் செலவழிக்க வேண்டும். சொந்தச் செலவுகளை அதமபட்சமாக்கிக் கொண்டு, தான தர்மங்களுக்கு முடிந்த மட்டும் செலவழிக்க வேண்டும். செலவுகளுக்குள் நமக்கு என்று இல்லாமல் தானமாகச் செலவழிப்பதுதான் உண்மையில் நமக்கு "வரவு". இதனால் புண்ணிய வரவு கிடைக்கிறது. தனக்கென்று செலவழிப்பதால் பெற முடியாத ஆத்ம சிரேயஸை இதனாலேயே பெறுகிறோம். சொந்த விஷயங்களில் "கணக்காயிருந்தால்" ஏழை எளியவர்களாலும் கூட ஒரு பைசாவாவது தர்மம் பண்ணமுடியும். அப்படி அவர்கள் கொடுக்கிற பைசாவை ஈசுவரன் கோடியாக மதித்து அநுக்கிரகம் செய்வான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.



# இவர் விட்ட சவால்!

புதிதாக ராகம் கண்டுபிடித்திருப்பதாக வித்வான்கள் கூறியிருக்கிறார்கள். இப்போது உமையாள்புரம் சிவராமன் சவால் விட்டிருக்கிறார்: நாராயணி என்ற தாளத்தைப் புதிதாக கண்டுபிடித்து வாசிக்கப்போகிறாராம்!

—எஸ்.வி.என்.

---

களை ஒரே வார்ப்பில் உருவாக்கும் கலைஞர்கள் சோழ நாட்டில் இருக்கிறார்கள்."

"சோழ நாட்டில் எங்கிருக்கிறார்கள்?" சிங்கணனின் குரலில் ஆவல் அபரிமிதமாகத் தொனித்தது.

"குடந்தைக்குத் தெற்கே சேங்காலிபுரம் என்ற நகர் இருக்கிறது. இத்தகைய அச்சுக்களை செய்வதைக் கலையாகப் பயின்றவர்கள் அங்கிருக்கிறார்கள். அங்கிருந்து அச்சுக்கள் கொண்டு வர இயலுமா உன்னால்?"

சோழ நாட்டில் தனக்கிருக்கும் அதிகாரத்தையும் அங்கிருக்கும் மூவாயிரம் போசள வீரர்களையும் எண்ணியவன் மனத்தில் நம்பிக்கை பிறந்தது. யாங்சின்னை ஏறிட்டவன், "நீ கூறிய இடத்திலிருந்து இன்னும் பத்து தினங்களுக்குள் அச்சுக்களை வரவழைக்கிறேன்" என்றான்.

யாங்சின்னிடமிருந்து அடுத்த கேள்வி வந்தது: "சிங்கணா, இந்த யந்திர வீரர்களுக்கு நாண் பூட்ட என்ன செய்யப் போகிறாய்?"

"அதற்கும் தனிப்படத் தயாரிக்கும் இடம் ஏதேனும் இருக்கிறதா? சொல். அதையும் வரவழைக்கிறேன்" என்றான் சிங்கணன்.

மீண்டும் நகைத்த யாங்சின், "சிங்கணா, நாண் பூட்டுவதற்கான மணிக்கயிறுகள் கோட்டைக்குள்ளே, இங்கேயே இருக்கின்றன. இதோ பார்... என்று கூறிவிட்டு கூடாரத்தினுள் தயாராக வைத்திருந்த நல்ல முறுக்கேறிய கயிறு ஒன்றை எடுத்து யந்திரப் பொறியிலும் மரக் கூடையிலும் சேர்த்து பக்குவமாகச் சுழற்றி மாட்டினான். அடுத்து தச்சர் நால்வரை அழைத்து வாட்களைத் தீட்டுவதற்காகத் திடலின் ஓரத்திலிருந்த பெரும் பாறையொன்றையும் எடுத்து மரக்கூடையில் வைக்க உத்தரவிட்டான்.

பொறியின் மறு பக்கமிருந்த விசையை இரண்டு சுற்றுக்கள் சுழற்றியதும், கயிறு முறுக்கேறி, அந்த மரக்கூடையை விசையுடன், உயர்த்தி பாறையை ஆகாயத்தில் எறிந்தது. அதிவேகத்துடன் பறந்து, திடலையும் கடந்த பாறை, சுற்றி வளைத்த கோட்டை மதிலின் ஒரு பகுதியை உடைக்கவும் செய்தது! அதே நேரத்தில் பொறியிலிருந்த மணிக்கயிறும் அறுந்து விழுந்து தொங்கியது!

சிதிலமாகிவிட்ட கோட்டை மதிலையும், அதற்குக் காரணமான யந்திரப் பொறியையும் கண்டு பிரமித்துப் போய் சிலையாகவே நின்ற சிங்கணனுக்கு, இதைப் போன்ற பல பொறிகளுக்கான மரங்கள் திடலில் கிடப்பதும் அவை முழுதும் வடிவமைக்கப்பட்டால் ஆயிரம் வீரர்கள் செய்யும் பணியை அவை செய்து விடும் என்பதும் புரிந்தது. இவற்றைக் கொண்டு பாண்டியரை மட்டுமின்றி, கிழக்கில் அச்சுறுத்திக் கொண்டிருக்கும் காகதீய மன்னனையும், காஞ்சியின் விஜயகண்ட கோபாலனையும் கூட அடக்கி விடலாம் என்றும் தீர்மானித்தான் சிங்கணன்.

(தொடரும்)

---

கருத்து: சீர்காழி வி. ரேவதி



காங்கிரஸ்

வாங்க! வாங்க! நீங்க முந்திக்கோங்க!

1996 மார்ச் 31
யுவ பங்குனி 18
மலர் : 54
இதழ் : 35

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## விரட்டப்பட வேண்டிய விஷப்பாம்பு!

தமிழகத்தில் கூட்டணி குறித்த முடிவைப் பளிச்சென்று எடுக்காமல், பிரதமர் வழக்கம் போல் குட்டையைக் குழப்பிக் கொண்டிருக்கிறார். இந்த இதழ் வெளியாகும் நேரத்தில் அவரது முடிவு அறிவிக்கப்பட்டிருக்கும். என்ன முடிவு எடுப்பார் என்பதை இப்போது சொல்ல இயலாவிட்டாலும் என்ன முடிவை அவர் எடுக்க வேண்டும் என்று அடித்துச் சொல்லலாம்.

அ.தி.மு.க.வும் சரி, காங்கிரசும் சரி, ஊழல் குற்றச்சாட்டுக்கு உள்ளான கட்சிகள் என்று பெயர் பெற்றுவிட்டன. ஆனால், குற்றம் சாட்டப்பட்டவர்களுக்கும் முன்னாள் குற்றவாளிகளுக்கும் அ.தி.மு.க. தலைமை பாதுகாப்பு அளித்து ஊக்குவித்து வருகிறது. அவர்களுக்கு எதிராக எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை. காங்கிரஸ் தலைமையோ, ஊழல் நடவடிக்கைக்குப் பச்சைக்கொடி காட்டியிருக்கிறது.

இந்தச் சூழ்நிலையில், காங்கிரஸ் அ.தி.மு.க.வுடன் தேர்தல் உடன்பாடு செய்து கொள்வது தற்கொலைக்குச் சமமாகும் என்பதை அரசியலின் ஆரம்பப் பாடம் மட்டுமே அறிந்தவர்கள்கூட ஒப்புக் கொள்வார்கள்.

தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணிக்கு எதிராக வாதாடுவோர், தி.மு.க.வின் பேரிலுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளுடன் இலங்கைப் பிரச்னையில் அக்கட்சி வகித்துள்ள விடுதலைப் புலிகள் ஆதரவு நிலையையும் சுட்டிக்காட்டுகிறார்கள்.

விடுதலைப்புலிகள் ஆதரவில் தீவிரம் காட்டிய தி.மு.க.வின் வை. கோபால்சாமி




பிரிவினர் தனிக்கட்சி அமைத்துவிட்டார்கள்.

தி.மு.க. பேரில் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளை ஆராய அமைக்கப்பட்ட சர்க்காரியா கமிஷன் வாபஸ் பெறப்பட்டது. குற்றப் பத்திரிகை எதுவும் தாக்கல் செய்யப்படவில்லை.

பின்னர் 1991-ல் கருணாநிதி தலைமையிலான தி.மு.க. ஆட்சி டிஸ்மிஸ் செய்யப்பட்டதற்கும் வலுவான ஆதாரங்களுடன் காரணம் காட்டப்படவில்லை.

எம்.ஜி.ஆர். மன்றங்களும் ஜனதா கட்சியும் இன்று தி.மு.க. - காங்கிரஸ் கூட்டணிக்கு வெளிப்படையாகவே ஆதரவு தெரிவித்துவிட்டன.

கருணாநிதியும் காங்கிரசுடன் 'கூட்டணி குறித்துப் பேசத் தயார்' என்று கூறிவிட்டார்.

இவ்வளவும் நடந்த பிறகு, பிரதமர் தி.மு.க. நீட்டும் நேசக்கரத்தை ஏற்பதுதான் புத்தி சாலித்தனம்.

ஆனால், உடனடி முடிவு எடுப்பதற்குப் பதிலாக காங்கிரஸ் தலைமை, கடைசி நிமிடம் வரை தங்களுக்குள்ளேயே பேசிப் பேசி மாய்ந்து கொண்டிருக்கிறது.

விஷப்பாம்பை அடிக்க முற்படுபவர்கள், கையில் கிடைத்த கழியை எடுத்துச் செயல்படுவார்களேயொழிய, கோலின் அழகை ஆராய்ந்து கொண்டிருக்க மாட்டார்கள்.

தமிழகத்தில் ஒன்றுக்குப் பலவாக விஷப்பாம்புகள் ஊர்ந்து கொண்டிருக்கின்றன. அவற்றை அப்புறப்படுத்தத்தான் பிரதமர் நடவடிக்கை எடுக்க வேண்டுமேயொழிய, அந்தப் பாம்புகளுக்குப் பால் வார்த்துப் போஷிக்கக் கூடாது. அவ்வாறு செய்வதனால் தமிழக காங்கிரஸ் மட்டுமல்ல, தமிழகமே நஞ்சு மயமாகிவிடும்.

## தேர்தல் வியாபாரம்!

ஓர் அறக்கட்டளை நிறுவி, அதற்குத் தொழில் நிறுவனங்கள் நன்கொடை வழங்க வேண்டியது; தேர்தல் சமயத்தில் பல்வேறு கட்சிக்காரர்களும் நன்கொடை கேட்டு நச்சரிக்




கும்போது, அந்த அறக்கட்டளை மூலம் உதவியைச் சமமாக அனைவருக்கும் வழங்க வேண்டியது....

- இந்தியத் தொழில்துறை நிறுவனங்கள் கூட்டமைப்பின் சமீபத்திய முடிவு இது.

அரசியல் களத்திலிருந்து லஞ்ச ஊழலை ஒழிக்கும் நோக்குடன் அறிவிக்கப்பட்டுள்ள இம்முயற்சி நிறைவேறினாலும், அதன் நோக்கம் நிறைவேறாது என்பதே சோகமான உண்மை!

பெரும்பாலான தொழிலதிபர்கள், ஆட்சிப் பொறுப்புக்கு வரக்கூடியவர்களிடமிருந்து பிரதியுபகாரத்தை எதிர்பார்ப்பதால்தான் நன்கொடையே தருகிறார்கள். ஓர் அறக்கட்டளை மூலம் அனாமதேயமாய் வழங்கப்படும் தொகைக்கு எந்தத் தனியொரு தொழிலதிபரும் பிரதியுபகாரம் கேட்க முடியாது.

எனவே, அறக்கட்டளைக்குக் கொடுக்கும் கணக்கில் வரும் தொகை தவிர, கணிசமான கறுப்புப் பணமும் தேர்தல் சமயத்தில் கைமாறத்தான் செய்யும்.

இந்த அவலநிலை நீங்க ஒரே வழி, தேர்தல் செலவினங்களை தாட்சண்யமின்றிக் குறைப்பதுதான். ஒவ்வொரு வேட்பாளரும், கட்சி சார்பிலும் சொந்தப் பணமாகவும், நண்பர்கள் உதவி, நன்கொடை என்றும் பெற்றுச் செலவழிக்கக் கூடிய ஒட்டுமொத்தத் தொகைக்குக் கடுமையான உச்சவரம்பு நிர்ணயிக்கப்பட்டால், தேர்தலின் போது பணத்தால் அடித்து வோட்டுப் பெறும் பழக்கம் மாறிப் போகும். கொள்கைகளை முன்வைக்கும் எளிமையான பிரசாரம் முக்கியத்துவம் பெறும். பதவிக்கு வர பணம் செலவழிப்பது - பிறகு பதவியிலிருக்கும்போதே பல மடங்காகச் சம்பாதிப்பது என்ற விஷ வட்டத்தை முறியடிக்க, இந்தச் சீர்திருத்தம் ஒன்றே சிறந்த வழி.



# ஸ்ரீராமின் சித்திரை கோலாகலம்

ஏப்ரல் 4-13, 1996


1


2


3


4


5


6


7


8


9


10


11

ஒவ்வொரு நாளும் பட்டுவாடா செய்யப்படும் ஏலத்தொகை ரூ.2 கோடி. விரைந்து எட்டிக் கொண்டிருக்கும் வணிக இலக்கு ரூ.1000 கோடி. தொடர்ந்து பெருகிவரும் சந்தாதாரர்களின் எண்ணிக்கை 11 லட்சம்.

கல்வி, திருமணம், வர்த்தகம், எதிர்பாராத தேவை என எதுவாக இருந்தாலும் சந்தாதாரர்களுக்கு உடனடியாக உதவும் நண்பனாக ஸ்ரீராம் சிட்ஸ் விளங்குகிறது. நீங்களும் உங்கள் வாழ்க்கையில் ஒரு புதுமலர்ச்சியைப் பெற வேண்டாமா? ஸ்ரீராம் இயக்கத்தில் இன்றே உறுப்பினர் ஆகுங்கள். அதுமட்டுமல்ல - ஒவ்வொரு புதிய சந்தாதாருக்கும் ஓர் அழகிய பரிசும் உண்டு - எப்போதும் போல.



## சந்தாதாரர் பரிசுகள்

| வ. எண் | சீட்டு மதிப்பு ரூபாயில் | சந்தாதாரர் பரிசு |
|---|---|---|
| 1. | 250 x 40 = 10,000 | SS ஸ்வீட் டிரே (2) |
| 2. | 500 x 30 = 15,000 | 5 கிராம் வெள்ளிக்காசு |
| 3. | 625 x 40 = 25,000 | மூடியுடன் கூடிய 2 SS பௌல்கள் |
| 4. | 500 x 60 = 30,000 | [illegible] |
| 5. | 1,000 x 50 = 50,000 | SS CB டேக்சா |
| 6. | 2,500 x 30 = 75,000 | SS CB ஃப்ரையிங் பான் |
| 7. | 2,500 x 40 = 1,00,000 | [illegible] SS கேசரோல் |
| 8. | 5,000 x 30 = 1,50,000 | SS இட்லி குக்கர் |
| 9. | 5,000 x 40 = 2,00,000 | ஹாகின்ஸ் மிஸ்மேரி 4.5 லிட்டர்ஸ் பிரஷர் குக்கர் |
| 10. | 10,000 x 30 = 3,00,000 | [illegible] SS குக்கர் 5 லிட்டர் |
| 11. | 20,000 x 25 = 5,00,000 | 4 கிராம் தங்கக் காசு |

* நுழைவுக்கட்டணம் தனி  * முன் அங்கீகாரம் பெறப்பட்டது

# ஸ்ரீராம் சிட்ஸ்.

# 0 லட்சத்திற்கும் மேலான சந்தாதாரர்களின் இதயங்களில் இடம் பெற்றுள்ள பெயர் !










## றைந்திருக்கும் பரிசை புடைய வழி:

இப்பொழுது உள்ள சந்தாதாரர்களுக்கு அனுப்பப்படும் அஞ்சலில் ஒரு புதிய சின்னஞ்சிறு காற்றாடி இடம் பெற்றிருக்கும். ஸ்ரீராம் கிளையில் ஒரு புதிய சந்தாதாரரை அறிமுகம் செய்தவுடன் அதனைக் கொடுத்து பரிசுக் காற்றாடிக் கூப்பனை பெற்றுக்கொள்ளலாம். இதில் உள்ள நூலை இழுக்கும் போது, 3 இலக்க எண் தென்படும். அதன் கூட்டுத் தொகைக்கேற்ப உங்கள் பரிசை நீங்கள் பெற்றுக் கொள்ளலாம். ஒவ்வொரு பரிசுக் காற்றாடிக் கூப்பனுக்கும் உங்களுக்கு ஒரு பரிசு உண்டு. ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் சிந்தாமணி டப்பா முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.










## தொடரும் பரிசுக் குவியல்:

இந்த அறிமுகப்படுத்துவோர் பரிசுகளைத் தவிர, ஆண்டு முழுவதும் உங்களுக்காகப் பரிசுகள் காத்திருக்கின்றன. மொத்தம் ரூ. 4 கோடி மதிப்புள்ள 402350 பரிசுகள். கைனடிக்ஹோண்டா முதல் 2 கிராம் தங்கக்காசு வரையுள்ள மாதாந்திர சூப்பர் குலுக்கல் பரிசுகளும், 4 கிராம் தங்கக் காசு முதல் மாருதி 800 கார் வரையுள்ள பம்பர் குலுக்கல் பரிசுகளும் இவற்றுள் அடங்கும்.







*ஸ்ரீராமில் சேர்ந்திடுங்கள்.*
*பரிசுகளை வென்றிடுங்கள்.*

- கிளைமேலாளர் முன்னிலையில் மட்டுமே காற்றாடியைத் திறக்க வேண்டும்.
- அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரர்களுக்கு மட்டுமே.
- அறிமுகப்படுத்துவோருக்காக மறைந்து காத்திருக்கும் பரிசுகளில் அடங்குபவை SS மிக்ஸ்பௌல், 4 கிராம் தங்கக்காசு முதல் 90 லிட்டர் ஃப்ரிட்ஜ் வரை.




**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் லிமிடெட்.
**ஸ்ரீராம்** சிட்ஸ்
தமிழ்நாடு லிமிடெட்.


நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்,"
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700/8523932/8522651/
8525536/8520797


ஸ்ரீராம் சிட்ஸ் - உங்கள் வளமைக்குப்பாதை.

ADWAVE/SCI/5277

